# பகவத் பாதை

# BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 2 • Issue: 11 • January 2016 • Annual Subcription Rs. 100/- • மலர் 2 • இதழ்: 11 • ஜனவரி 2016 • வருடச் சந்தா ரூ. 100/-



குடும்பம் ஒரு கோயில்

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே







கணவன் மனைவி உறவை மையமாக வைத்தே குழந்தைகள்-குடும்பம் என்ற எல்லா உறவுகளும் முக்கியத்துவம் பெறுகின்றன. கணவன் மனைவி உறவு என்பது இயற்கையானதாக உயர்வு பெறும்போது தான், எல்லா உறவுகளிலும் உன்னதமானது கணவன் மனைவி உறவு தான் என்பதும் தெரிய வரும்.

– ஸ்ரீ பகவத்






நாம் அனைவரும் சேர்ந்து "ஸ்ரீ பகவத் பவன்" என்ற பெயரில் நமக்காக அமைத்துக் கொண்ட இல்லத்தின் புதுமனை புகுவிழா நிகழும் மன்மத வருடம் தை மாதம் 6-ஆம் தேதி, புதன்கிழமை (20-01-2016) காலை 11 மணிக்கு நடைபெற உள்ளதால்,

தாங்கள் அனைவரும் குடும்பமாக வந்திருந்து விழாவினை நடத்திச் சிறப்பிக்குமாறு அன்புடன் வேண்டுகிறேன்.



QR Code For Navigation To "SRI BAGAVATH BAVAN"

இவண்,
தங்கள் அன்புள்ள,
ஸ்ரீ பகவத்

## 2016-ஆம் ஆண்டின் மாத காலண்டர்



பக்தி செய்வதும்... பக்தியை ஏற்றுக் கொள்வதும்... ஒரே நான் தான்... என்பதை புரிந்து கொண்டால்... பக்தி நாடகமே முடிந்து விடும்...

2016 January ஜனவரி 20

| SUN | MON | TUE | WED | THU | FRI | SAT |
|---|---|---|---|---|---|---|
| 31 | | | | | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 |
| 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |

ஸ்ரீ பகவத் ஐயாவின் ஞானக் கருத்துகளை தன்னகத்தே கொண்ட 2016 ஆம் ஆண்டின் புதிய மாத காலண்டர் ஐயாவின் படங்களுடன் வெளியிடப்பட்டுள்ளது.

இதில் இருக்கும் ஐயாவின் ஞானக் கருத்துகள், நாம் பெற்ற தெளிவில் உறுதி பெறவும், புதிய அன்பர்களுடன் பகிர்ந்து கொள்ளவும் பேருதவியாக இருக்கும். இதை தாங்களும் பயன்படுத்தி, நண்பர்களுக்கும் புத்தாண்டு பரிசா வாங்கி அனுப்புமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஸ்ரீ பகவத் மிஷன்,
சேலம்.

கூடுதல் தகவல்களைப் பெற விருப்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விருப்புகிறீர்களா?




Sri Bagavath Mission


31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.
**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**
www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com






This Book Designed By:
**ORANGE DESIGNER SALEM**
Mobile : 9894377433

# குடும்பம் ஒரு கோயில்



நாம் நமது சிந்தனைகளை அகம் மற்றும் புறம் என இரு வகையாகப் பிரித்துக் கொண்டுள்ளோம்.

அகத்தைப் பொறுத்தவரையிலும் நமக்கு எந்த வேலையும் பொறுப்பும் கிடையாது என்பதைப் பல கோணங்களிலும் பார்த்து வருகிறோம்.

புற உலக நிகழ்வுகளைப் பொறுத்த வரையிலும் நமது பங்கு உள்ளது. உலக வாழ்வை நாம் திட்டமிட்டு முறைப்படுத்திக் கொள்ள வேண்டும்.

– இவ்வாறு நாம் பல முறையும் பொதுவாகக் கூறியுள்ளோம்.

புற உலகத்தைப் பொறுத்த வரையிலும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான தகுதியோடு இருப்பார்கள்.

ஒவ்வொருவரும் ஒவ்வொரு விதமான சூழ்நிலைகளில் செயல்பட்டுக் கொண்டிருப்பார்கள்.

ஆகவே ஒவ்வொருவரும் தங்களுடைய சூழ்நிலையில் எவ்வாறு செயல்பட வேண்டும் என்பதை நாம் அவர்களுக்கு அறுதியிட்டுக் கூறிவிட முடியாது.

அதை அவரவர்களேதான் தீர்மானித்துக் கொள்ள வேண்டும். ஆனால் சில பொது நிகழ்வுகள் குறித்து நாம் நமது கருத்துக்களைப் பரிமாறிக் கொள்ளலாம்.

அந்த வகையில் கணவன் மனைவி உறவு பற்றி அன்பர்களுடன் சிந்தக்க நேர்ந்தது. அதை இங்கு குடும்பம் என்ற தலைப்பின் கீழ் பகிர்ந்து கொள்ளப் போகிறோம்.

“பெண்கள் தற்போது மிகவும் சுதந்திரமாகவும், முற்போக்காகவும் நடந்து கொள்கிறார்கள். படிக்கும் பெண்களுக்குப் பல ஆண் நண்பர்கள் இருக்கிறார்கள். இதையெல்லாம் நாம் எப்படி எடுத்துக் கொள்வது? நம் வீட்டுப் பெண் குழந்தைகளை நாம் எவ்வாறு வழிநடத்துவது?”

– இப்படிச் சிலர் கேள்விகளை எழுப்பினார்கள்.

பெண் சுதந்திரம் வெகுவாகப் போற்றப்படுகிறது. முற்காலத்தில் பெண்கள் அனைவரும் அடிமைகளைப் போலவே நடத்தப்பட்டு வந்தார்கள். வீட்டிலிருந்து சமையல் செய்துப் போடுவதும், குழந்தைகளைப் பராமரிப்பதும்தான் அவர்களது வேலை. அக்காலத்தில் பெரும்பாலும் ஒவ்வொரு வீட்டிலும் ஐந்து குழந்தைகளுக்கும் அதிகமாகவே இருப்பார்கள். அதனால் குழந்தைகளைப் பராமரிப்பதே முழு நேர வேலையாக இருக்கும்.

இன்றைய சூழ்நிலையில் பெரும்பாலான பெற்றோர்கள் ஒரே ஒரு குழந்தையுடன் தான் இருக்கின்றனர். அதுவே போதும் என்ற மனநிலையுடன் தான் அவர்கள் இருக்கின்றனர்.

இதனால் அவர்களுக்கு வீட்டு வேலை என்பது வெகுவாகக் குறைந்து விட்டது. மேலும் பெண்கள் அனைவரும் உயர்நிலைக் கல்வியையும் முடித்து விடுகின்றனர்.

தனித்து இயங்கும் தகுதியைப் பெற்றவர்கள் அனைவரும் சுதந்திரம் பெற்றவர்களே. இதனால் காலப்போக்கில் அவர்கள் அனைவரும் தங்களது சுதந்திரத்தை தங்களுக்குள் அங்கீகரிக்கும் மனநிலைக்கு வந்து விடுகின்றனர்.

முந்தைய கால மனநிலையை எடுத்துக் கொண்டால் பெண்கள் அனைவரும் தாங்கள் ஆண்களுக்குக் கட்டுப்பட்டவர்கள் என்ற எண்ணமே இருக்கும். அதை அனுசரித்தே அவர்களுடைய செயல்பாடுகளும் அமைந்திருக்கும்.

தற்போதைய சூழ்நிலையையும். மனநிலையையும் வளர்ச்சி என எடுத்துக் கொள்ள வேண்டுமா? அல்லது அதனை வீழ்ச்சியாக எடுத்துக்கொள்ள வேண்டுமா?

சுதந்திரமில்லாத கட்டுப்பாடு என்பது ஓர் அடிமைத்தனமே. அது சரியானதன்று. அதுபோல் கட்டுப்பாடே இல்லாத சுதந்திரமும் ஆபத்தானதே. அதுவும் சரியானதன்று.

ஆகவே தற்போதுள்ள மாற்றத்தை வளர்ச்சி என்று எடுத்துக் கொள்வதில் தவறில்லை. ஆனால் அவசியமான

கட்டுப்பாடுகளைப் புறக்கணித்து விடக்கூடாது.

அவசியமான கட்டுப்பாடுகளுடன் சேர்த்துக் கவனிக்கும் போது மட்டுமே இப்போதைய மாற்றத்தை வளர்ச்சியென்று கருத முடியும்.

கட்டுப்பாடுகள் என்றால் என்ன?

சுதந்திரம் என்றால் என்ன?

வெளிநாட்டைச் சார்ந்த அன்பர் ஒருவர் நம்முடன் தொடர்பில் இருந்தார். அவர் வயது சுமார் 25 இருக்கும். மனைவியுடன் வசித்து வந்தார். அவருடைய தகப்பனார் இறந்து விட்டார். தாயார் இன்னுமொருவரை மணம் செய்து கொண்டாள். இவர் அதை சாதாரணமாக எடுத்துக் கொண்டார்.

அடுத்த வருடம் இவருடைய மனைவியும் இவரைப் பிரிந்து சென்று விட்டார். அதையும் இவர் சாதாரணமாகவே எடுத்துக் கொண்டார். அதன் பிறகு அவர் இன்னுமொரு மனைவியைத் தேடிக் கொண்டார்.

இதுபோல் வெளிநாட்டு அன்பர்களில் இன்னும் ஒருவர். அவர் சற்று வயதானவர். அவர் என்னைச் சந்திக்க வந்தார். அவருடன் இளைஞர் ஒருவரும் வந்திருந்தார். இருவரும் தந்தையும் மகனுமாக இருப்பார்களோ என எண்ணினேன்.

ஆனால் அவர்கள் உறவு வேறு வகையாக இருந்துள்ளது. அந்தப் பெரியவரின் மகளை அந்த இளைஞர் திருமணம் செய்திருந்தார். ஆனால் அதன்பிறகு அவரைப் பிரிந்து வேறு ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டு விட்டார். அந்தப் பெரியவர் அதை மிகவும் சாதாரணமாகவே எடுத்துக் கொண்டார். அந்த இளைஞனுடன் எப்போதும் போல் சகஜமாகவே பழகி வந்தார்.

நமது நாட்டில் இத்தகையதொரு காட்சியைப் பார்க்க முடியுமா?

ஆனால் நமது நாட்டிலும் நமது கலாச்சாரம் மாறத் துவங்கியுள்ளது. இளம் பெண்கள் பல ஆண் நண்பர்களை வைத்துள்ளனர். அவர்கள் அவர்களுள் எவரையாவது திருமணம் செய்வதும் உண்டு. அவர்கள்அனைவரையும் விட்டு விட்டுப் பெற்றோர் ஏற்பாடு செய்யும் வேறு நபரைத் திருமணம் செய்வதும் உண்டு.

முந்தைய காலங்களில் இளம் பெண்களுக்கு ஆண் நண்பர்கள் எவரும் இருக்க மாட்டார்கள். அப்போதுள்ள சூழ்நிலை வேறு; இப்போதுள்ள சூழ்நிலை வேறு. பள்ளி. கல்லூரி, அலுவலகம் எனப் பல இடங்களிலும் இருவரும் சேர்ந்து பழகுவதற்கான சூழ்நிலை தான் இப்போது அமைந்துள்ளது.

சூழ்நிலையின் இந்த மாற்றமும் தவிர்க்க முடியாத ஒன்று தான். ஆகவே நமது சமுதாயமும் சிறுகச் சிறுக மேல்நாட்டு நடைமுறையை நோக்கி நகர்ந்து கொண்டிருக்கிறது.

குடும்ப உறவு என்பதை மட்டும் கணக்கில் எடுத்துக் கொண்டால் இந்தியர்களாகிய நமது பண்பாடுதான் சிறந்தது என்பதை வெளிநாட்டவர்களும் ஒப்புக்கொள்கின்றனர்.

உலகியல் முன்னேற்றங்கள் பலவற்றில் நாம் வெளிநாட்டவரையே பின்பற்றி வருகிறோம். அதில் தவறில்லை. ஆனால் ஆன்மீகம் மற்றும் குடும்ப நடைமுறைகளில் இந்தியர் தாம் முன்னோடியாக இருக்கின்றனர். இவை சம்பந்தப்பட்டவரையில் அவர்கள் தாம் நம்மைப் பின்பற்ற வேண்டுமே தவிர நாம் அவர்களைப் பின்பற்றுவது சரியல்ல.

எனது அனுபவத்தை எடுத்துப் பார்க்கும் போது எல்லா உறவுகளிலும் கணவன் மனைவி உறவு தான் உயர்ந்ததாகத் தெரிகிறது.

நாம் நமது பெற்றோருடன் வாழ்ந்திருக்கலாம்; சகோதர சகோதரிகளுடன் வாழ்ந்திருக்கலாம்; குழந்தைகளுடன் வாழ்ந்திருக்கலாம்.

நாம் நமது பெற்றோர்கள் மீது வைத்திருக்கும் அன்பை விட அவர்கள் நம் மீது அதிகமான அன்பைக் காட்டி வந்திருப்பார்கள். குழந்தைகள் நம் மீது காட்டும் அன்பை விட நாம் அவர்கள் மீது அதிகமான அன்பைக் காட்டி வந்திருப்போம். நாம் நமது பெற்றோருடனோ, குழந்தைகளிடமோ கோபங் கொண்டு சண்டையிடுவதை விட

கணவன் மனைவியிடமும், மனைவி கணவனிடமும் அதிகமாக பல மடங்காகச் சண்டையிட்டிருப்பார்கள்.

ஆனாலுங்கூட கணவன் மனைவி உறவு என்பது மற்ற எல்லா உறவுகளை விடவும் உயர்ந்ததாக உள்ளது.

பெற்றோர்-பிள்ளைகள் என்ற உறவு மாற்ற முடியாது. சகோதரர்-சகோதரி என்ற உறவு மாற்ற முடியாது. அது இயற்கையானது; இரத்த சம்பந்தமுடையது; நிரந்தரமானது.

ஆனால் கணவன் மனைவி உறவு இப்படி இயற்கையானதன்று. அது செயற்கையானது. நாமாக அமைத்துக் கொண்டது. ஆகவே அவர்கள் சேர்ந்தும் இருக்கலாம்; பிரிந்தும் போய் விடலாம்.

பிரிந்து போய்விடும் சுதந்திரத்தை வெளிநாட்டவர் மிகச் சுலபமாக பயன்படுத்துவதால்தான்.

அவர்களுடைய கணவன் மனைவி உறவு சிறப்பாக அமைவதில்லை.

நமது நாட்டைப் பொறுத்த அளவில், கணவன் மனைவி பிரிந்திடுவது என்பது சாத்தியம் இல்லை என்ற மன நிலை தான்,

இருவருக்குமிடையே உள்ள உறவை இயற்கையாக மாற்றி விடுகிறது.

செயற்கையான இந்த உறவு கூட இயற்கையான உறவாக மாறிவிடுகிறது.

அப்படி அது இயற்கையான உறவாக அமைந்திடும் போது தான் அது எல்லா உறவுகளிலும் உயர்ந்த உறவாக அமைந்து விடுகிறது.

கணவன் மனைவி உறவிலும் கூட சிலர் தடம் புரண்டு விடுவதுண்டு.

எனது உறவினர் ஒருவர் சிறிய ஹோட்டல் நடத்தி வந்தார். அவர் சமையல் மாஸ்டரை எப்படி வேலைக்குச் சேர்ப்பது என்பதைப் பற்றிய அவருடைய

பிரதாபங்களைக் கூறுவார்.

“எனது ஹோட்டலுக்கு சமையல் மாஸ்டர் தேவைப்பட்டால், நகரத்திலுள்ள வேறு பகுதியிலிருக்கும் ஹோட்டல்களுக்குப் போவேன். சில ஹோட்டல்களில் சமையல் மாஸ்டரே சர்வராகவும் இருப்பார். சாப்பிடுவது போல் சாப்பிட்டுக் கொண்டே அவரிடம் பேச்சு கொடுப்பேன். சம்பளத்தைக் கூட்டித்தருவதாகக் கூறுவேன்.

அவரும் “நீங்கள் பஸ் ஸ்டாண்டுக்குப் போங்கள், நான் வந்து விடுகிறேன்” என்று கூறி அவர் கூறிய படியே வந்து இணைந்து கொள்வார்.....

“இந்த குறுக்குப் பாதை எனக்கு மட்டும் சொந்தமானதல்ல. ஒரு முறை எனது ஹோட்டலுக்குச் சாப்பிட இன்னுமொரு ஹோட்டல் உரிமையாளர் வந்திருந்தார். எனக்குச் சந்தேகந்தான். சந்தேகப்பட்டபடியே நடந்து விட்டது. அவர் போன சிறிது நேரத்தில் எனது ஹோட்டல் சமையல் மாஸ்டர் தலைமறைவாகி விட்டார்.அது மட்டுமல்ல; அவருக்கு என்ன கோபமோ தெரியவில்லை. அவர் போகும் போது தோசை மாவு பாத்திரத்தில் உப்பையும் கொட்டிவிட்டுப் போய்விட்டார்.”

இப்படிக் கணவன் மனைவியரில் சிலர் தடம் புரண்டு விடுவதும் உண்டு. ஆனால் இது பொதுவான நிகழ்வல்ல. விதிவிலக்காகவே இப்படி நிகழ்ந்து விடும். அப்படி நிகழ்ந்திடும் பட்சத்தில் கணவன் மனைவி உறவானது வெறும் செயற்கையாகவே இருந்து விடும். இயற்கை உறவாக மாறியமையாமல் போய் விடும்.

இப்படித் தடம் புரளாதவர்களில் சிலர் கூட ஒருவரை விட்டு ஒருவர் பிரிந்து விடுவதுண்டு. அதனையும் விதிவிலக்காகவே எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர, பொது நியதியாக எடுத்துக் கொள்ளக் கூடாது.

கணவன் மனைவி உறவை மையமாக வைத்தே குழந்தைகள்-குடும்பம் என்ற எல்லா உறவுகளும் முக்கியத்துவம் பெறுகின்றன.

கணவன் மனைவி உறவு என்ற அச்சாணி முறிந்து விட்டதானால் எல்லா உறவுகளும் சிதறிப் போய் விடும்.

கணவன் மனைவி உறவு என்பது இயற்கையானதாக உயர்வு பெறும்போது தான், எல்லா உறவுகளிலும் உன்னதமானது கணவன் மனைவி உறவு தான் என்பதும் தெரிய வரும்.

சிலர் திருமணம் செய்திருப்பர்; ஆனால் குழந்தை வேண்டாம் என்று இருப்பர். குழந்தையின்மை இயற்கையாக அமைந்திருப்பதில் குற்றமில்லை. இவர்களாகவே முடிவெடுத்து குழந்தையில்லாமல் இருப்பது தவறாகும். அது அவர்களது உறவை செயற்கையாகவே வைத்துவிடும். இயற்கை உறவாக மாறவிடாமல் செய்து விடும்.

பெண்களின் சுதந்திரத்தைப் பற்றி ஆய்வு செய்ய ஆரம்பித்தோம்.

பெண்கள் சுதந்திரமாக இருப்பது மிகவும் சரியானதே. ஆனால் அவர்கள் தங்களுக்குள்ள பொறுப்புகள் என்ன என்பதைப் பற்றியும் அறிந்திருக்க வேண்டும்.

தங்களுடைய பாரம்பரியமானது பெருமைமிக்க பாரம்பரியமாகும் என்பதை அவர்கள் புரிந்து கொண்டார்களேயானால்,

அது அவர்களுக்கு உதவி செய்யும்.

நமது நாட்டுப் பண்பாட்டின்படி நமது குடும்பம் ஒரு கோவிலாக உள்ளது.

மேல்நாட்டு நாகரிகத்தின்படி குடும்பம் ஒரு ஹோட்டலாக உள்ளது.

நமது குடும்பப் பெருமையை நமது குழந்தைகளுக்கு சிறுகச் சிறுக புரிய வைப்பது பெரியவர்களின் கடமையாகும்.

அதைத் திணித்து, எதிர்ப்புணர்வை ஏற்படுத்தி விடாமல் மென்மையாக இதனைப் புரிய வைக்க வேண்டும்.



## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்க்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–** **ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission**

**A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



"தீய பழக்கமும் புரிதலும்"

# கேள்வி பதில்



V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

**கேள்வி:**

நான் பகவத் ஐயாவின் நூல்களை படித்து மனதைப் பற்றி ஓரளவிற்குப் புரிந்து வைத்துள்ளேன். நான் சில தவறான தீயப்பழக்கத்தில் 20 ஆண்டுகளாக சிக்கித் தவிக்கிறேன். அந்தத் தீயப் பழக்கத்திலிருந்து என்னால் மீண்டு வெளிவர முடியவில்லை. எனது அறிவுக்கு நான் செய்வது தவறு என்பது நன்றாகத் தெரிகிறது. என்னையும் மீறி மனம் அந்த தீயப் பழக்கத்தை நாடி விடுகிறது. தீயப் பழக்கத்திலிருந்து விடுபடுவதற்காக நானும் எல்லாவிதமான முயற்சிகளும் எடுத்துப் பார்த்துவிட்டேன். எல்லாவற்றிலும் தோல்வி மட்டுமே ஏற்படுகிறது. தீயப் பழக்கத்திலிருந்து விடுபட முடியாமலும் அதனால் எனக்கு ஏற்படும் குற்ற உணர்ச்சியாலும், தாழ்வு மனப்பான்மையாலும் தாங்கவே முடியாத வேதனையில் இருக்கிறேன். இதனால் என்னையே எனக்குப் பிடிக்கவில்லை. நான் என்னுடைய தீயப் பழக்கத்திலிருந்து எப்படி விடுபடுவது? குற்ற உணர்ச்சிகளின் கோரப்பிடியிலிருந்து எப்படி மீள்வது?

**பதில்:**

உங்களின் மனம் திறந்த கேள்விக்கு மிக்க நன்றி. தீயப் பழக்கத்தின் கோரப்பிடியில் எப்படி சிக்கித் தவிக்கிறீர்கள் என்பது உங்களின் கேள்வியின் மூலம் புரிந்து கொள்ள முடிகிறது. நீங்கள் மட்டும் அல்ல, பலரும் இப்படி ஏதோ ஒரு தீயப் பழக்கத்தில் சிக்கித் தடுமாறிக் கொண்டு தான் இருக்கிறார்கள். இந்தத் தீயப் பழக்கத்திலிருந்து விடுபடுவதற்கு பகவத் ஐயாவின் புரிதல் எவ்வாறு உதவுகிறது என்பதை நாம் சிந்திப்போம்.

ஏதோ ஒரு புறத்தூண்டுதலின் காரணமாக நாம் முதன்முதலாக இப்படி ஒரு பழக்கத்தில் ஈடுபடுகிறோம். அந்தப் பழக்கத்தினால் நாம் இதுவரை அனுபவித்து விடாத மிகவும் புதுமையான மகிழ்ச்சியான அனுபவமும், இன்பமான உணர்வும், கிளர்ச்சியும் ஏற்படுகிறது. அந்தக் கிளர்ச்சியான மன உணர்வும், அனுபவமும் நமக்கு மிகவும் பிடித்துப் போய் விடுகிறது. நாம் மிகவும் இன்பமாக இருப்பது போல் நமக்குத் தோன்றுகிறது. பிறகு அதுவே பழக்கமாகி விடுகிறது. ஆரம்பத்தில் நமது கட்டுப்பாட்டில் இருந்து வந்த இந்தப் பழக்கம் போய் பிறகு அந்தப் பழக்கத்தின் கட்டுப்பாட்டிற்கு நாம் வந்துவிடுகிறோம். நாம் மட்டும் தனிமையாக இருக்கும் நேரங்களிலெல்லாம் அந்தப் பழக்கத்தின் நினைவுகளில் மட்டும் இருக்கிறோம். பிறகு அந்தப் பழக்கத்திற்கு அடிமையாகி விடுகிறோம்.

நாம் இந்தப் பழக்கத்திற்கு அடிமையான பிறகு தான் நமது கண நேர இன்பத்திற்காக இந்தப் பழக்கம் நம் உடலையே கெடுத்து கடுமையான பாதிப்பை ஏற்படுத்துகிறது என்பதை நாம் நன்றாகப் புரிந்து கொள்கிறோம். இந்தப் பழக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்று நாமும் போராடிப் போராடித் தோற்றுப் போய், அந்தப் பழக்கம் மட்டுமே இறுதியாக வெற்றி பெறுகிறது. நாம் எவ்வளவோ முயன்றும் தோல்வி அடைவதால் நம்மால் இந்தப் பழக்கத்திலிருந்து விடுபடவே முடியாது என்று நினைப்பதினால் குற்ற உணர்ச்சியும், தாழ்வு மனப்பான்மையும் ஏற்படுகிறது. இதனால் மேலும் நாம் நிலைகுலைந்து நொந்து போய் விடுகிறோம்.

இப்படித்தான் தீயப் பழக்கம் ஒவ்வொன்றும் செயல்படுகிறது. நகம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான தீயபழக்கம் இருந்தாலும், அந்த பழக்கத்தின் செயல்பாடு ஒரே மாதிரியாகத் தான் செயல்படுகிறது.

இன்னும் கொஞ்சம் ஆழமாகச் சிந்திப்போம். இந்தப் பழக்கத்தில் நமக்கு நல்ல கைதேர்ந்த அனுபவம் இருக்கிறது. நமக்கு இந்தப் பழக்கத்தை பற்றி நினைவு ஏற்பட்ட உடனே, அந்தப் பழக்கத்தினால் ஏற்பட்ட உணர்வும் அனுபவமும் நினைவுக்கு வருகிறது.

இதனால் உடலில் அதற்குத் தேவையான இரசாயன மாற்றத்தைத் தூண்டுகிறது. பிறகு நமது அறிவுக்குத் தவறு என்று தெரிந்தும் நம்மால் நிறுத்த முடியாமல் அந்தப் பழக்கத்தில் ஈடுபட்டு விடுகிறோம். தீயப் பழக்கத்தில் ஈடுபட்டு முடிந்த பிறகு ஏற்படும் குற்ற உணர்ச்சியும், தாழ்வு மனப்பான்மையும் நம்மால் தாங்க முடியவில்லை. நமக்கு ஏற்படும் குற்ற உணர்ச்சியினால் மறுபடியும் நாம் இந்தப் பழக்கத்தில் மட்டும் ஈடுபடவே கூடாது என்று தீவிரமாக முடிவு எடுக்கிறோம். பிறகு மீண்டும் தீயப் பழக்கத்தில் ஈடுபடுகிறோம். குற்ற உணர்ச்சி, தாழ்வு மனப்பான்மையும் கொள்கிறோம். நம்மால் இதிலிருந்து மீளவே முடியாது என்று ஒரு முடிவுக்கு வந்து விடுகிறோம்.

நாம் திரும்பத்திரும்ப ஒரே அடிப்படையில்தான் செயல்படுகிறோம். அதாவது தீயப்பழக்கத்தை பற்றிய சிந்தனை, செயல், குற்ற உணர்ச்சி, தாழ்வு மனப்பான்மை, வெறுத்துப்போவது, பிறகு மறுபடியும் இந்த பழக்கத்தில் ஈடுபடக்கூடாது என்ற வைராக்கியம் கொள்வது பிறகு நமது வைராக்கியத்தில் தோல்வியடைந்து, திரும்பத் தீயப்பழக்கத்தில் ஈடுபடுதல் என தொடர்ந்து திரும்பத் திரும்ப ஒரே சுழற்சியில் மட்டுமே ஈடுபட்டு வருகிறோம்.

இனி எப்படித் தான் இந்த தீயப்பழக்கத்திலிருந்து விடுபடுவது. முதலில் அந்தப் பழக்கத்தில் ஓர் இன்பத்தை நாடினோம். இப்போது

அந்தப் பழக்கத்திலிருந்து எப்படியாவது விடுபட்டால் நாம் நன்றாக இருப்போம் என்று மீண்டும் இன்பத்தை நாடுகிறோம். தீயப்பழக்கத்தின் மீது நாம் கொண்ட ஆர்வமும் இன்ப நாட்டமே. எப்படியாவது தீய பழக்கத்திலிருந்து விடுபட்டு நிறைவாக வாழலாம் என்பதும் இன்ப நாட்டமே. நமது மொத்த பிரச்சனைக்குக் காரணம் இன்ப நாட்டமே. இந்த ஒரு பழக்கத்தைத் தவிர மற்றவை எவையும் நமக்குப் பெரிய விசயமாக தெரியாது. இந்த ஒன்றிலிருந்து மீண்டு விட்டால் வாழ்க்கையில் வெற்றி பெற்றதாக தோன்றும். வெற்றி பெற வேண்டும் என்கிற தீவிரம் இருக்கும் வரை நம்மால் தீயப் பழக்கத்திலிருந்து விடுபடவே முடியாது.

ஒரு தீயப்பழக்கத்தை நாம் பிரித்துப் பார்ப்போம். அதில் தீய பழக்கத்தைப் பற்றி சிந்திப்பதும், பிறகு வேண்டாம் என்று முடிவு எடுத்துப் போராடுவதும், பிறகு தீயப் பழக்கத்தில் ஈடுபடுவதும், குற்ற உணர்ச்சி கொள்வதும், தாழ்வு மனப்பான்மை ஏற்படுவதும், நம்மை நாமே வெறுப்பதும் எனப் பலவும் சேர்ந்த ஒரு தொகுப்பே இந்த தீயப் பழக்கம் ஆகும். இதில் நாம் தீயப் பழக்கம் என்ற செயலில் ஈடுபடும் நேரம் வெகு குறைவு. அந்தப் பழக்கத்தை பற்றிய சிந்தனை, போராட்டம், குற்ற உணர்ச்சி, தாழ்வு மனப்பான்மை, நம்மை நாமே வெறுப்பது என்பவற்றிற்கு நாம் மனதில் எடுத்து சுமக்கும் நேரம் மிக அதிகம்.

உதாரணமாக செயலுக்கு 10 நிமிடம் என்றால் நாம் அதைப் பற்றி மனதில் சுமப்பதற்கு எடுத்துக் கொள்ளும் நேரம் எவ்வளவு என்று நம்மால் கூறமுடியாது. அவ்வளவு நேரம் மனதில் சுமந்து கொண்டு போராடுகிறோம். இந்தச் செயல் வேண்டாம் என்று முடிவெடுப்பதோடு முடித்துக் கொள்ள வேண்டும். ஆனால் சிந்தனை, குற்ற உணர்ச்சி, தாழ்வு மனப்பான்மை என்பது எல்லாம் வெறும் எண்ணம் தானே. எண்ணத்திற்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது என்பதை நாம் முன்பே பார்த்திருக்கிறோம். எண்ணம் தாமாகத் தோன்றி தாமாக மறைவது தான் இயற்கை. நமது மனதில் அந்தப் பழக்கத்தைப் பற்றிய நினைவு ஏற்படுவதை எதிர்த்து நமது அறிவால் ஒன்றும் செய்ய முடியாது என்ற தோல்வியை ஒப்புக் கொண்டு நமது மன உணர்ச்சிகளை, சிந்தனைகளை ஒருபோதும் வெற்றி கொள்ள முடியாது என்ற தனது இயலாமையை நமது அறிவு தெரிந்து கொண்டு மனப்போராட்டத்தைக் கைவிடுவது மட்டுமே வழி.

இப்படி நமது அறிவு புரிந்துகொள்ளும் போது இந்தத் தீயப் பழக்கத்தின் தொடரில் செயலே நடந்தாலும் நாம் ஒன்றும் செய்ய முடியாது என்ற நிலைக்குச் சென்று விடுகிறோம். இந்தப் பழக்கத்தை அறிவுப்பூர்வமாக, நேருக்கு நேராக நின்று ஒரு காலமும் வெற்றி கொள்ள முடியாது என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு பழக்கத்தை வெற்றிக் கொள்வது என்பது வேறு, இந்தப் பழக்கத்தை வெற்றியே கொள்ள முடியாது என்று தோல்வியை ஏற்பதைத் தவிர வேறு வழியே இல்லை என்பதைப் புரிந்து கொள்வதால் புதிய பரிணாமத்திற்கு நமது அறிவு செல்கிறது. தனது கையறு நிலையை அறிவு புரிந்து கொள்கிறது. இப்படி அறிவு புரிந்து கொள்ளும் போது தீயப் பழக்கத்தின் தீவிரம் தளர்வுக்கு வருகிறது. தீயப் பழக்கத்திலிருந்து விடுபடுவதைத் தம்மால் நேரடியாகத் தெரிந்து கொள்ளவே முடியாது. காலப்போக்கில் கொஞ்ச நாட்களுக்குப் பிறகு நாம் சிந்தித்துப் பார்க்கும் போது முன்பு இருந்து வந்த தீவிரம் இப்போது இல்லை என்பதை நாம் புரிந்து கொள்வோம்.

ஒரு செயலில் வெற்றி பெற வேண்டும் என்றால் பல தீவிரமான முயற்சிகள் தேவை. இப்படி நாமும் வாழ்க்கையில் முயன்று சில அறிவு சார்ந்த செயல்களில் ஈடுபட்டு வெற்றி பெற்று இருக்கிறோம். இதனால் நமது அறிவு நம்முடைய ஒட்டு மொத்த மன இயக்கத்தையும் தனது கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வர தீவிரமாக முயன்று வருகிறது. அது ஒருபோதும் முடியாது என்பது நாம் இந்தப் புரிதலுக்கு வரும் முன்பு வரை தெரியாது. புரிதலுக்குப் பின்புதான் நமது அறிவின் எல்லை (limitation) என்ன என்பதையும், அறிவின் இயலாமை என்ன என்பதையும் நாம் புரிந்து கொள்கிறோம்.

நமது மன உணர்வுகளையும், எண்ணத்தையும் நமது அறிவால் எதிர்த்து எதுவுமே செய்ய முடியாது என்பதைப் புரிந்து கொள்வதுதான் அறிவின் இயலாமையைப் புரிந்து கொள்வது ஆகும். தீயப்பழக்கத்தினால் ஏற்படும் எண்ணத்தையும், உணர்வுகளையும் எதிர்க்கும் தோறும் தீயப் பழக்கமே உயிர் பெறுகிறது. நமது அறிவால் தீயப் பழக்கத்தை எதிர்க்கவே முடியாது என்பதை அறிவுபூர்வமாக புரிந்து கொள்ளும் போது ஆற்றின் போக்கை எதிர்த்து செயல்பட்ட அறிவு, ஆற்றின் போக்கில் தன்னை இணைத்துக் கொள்ளும் தன்மைக்கு வந்து விடுகிறது.

இப்படி ஆற்றின் போக்கில் நமது அறிவு இணைந்து கொள்ளும்போது நமது எல்லா உணர்வுகளும் மலர்வடைந்து ஓடி மறைகின்றன. நமது அக உணர்வுகள் சுதந்திரமானது இயற்கையானது, ஓடிக்கொண்டு இருக்கும் ஆற்றைப் போன்றது என்பதைப் புரிந்து நமது அறிவு செயல்படும் போது நமக்குத் தெரியாமலே தாமாகவே மாற்றம் ஏற்பட்டு, தீயப்பழக்கத்தின் தீவிரம் தானாகவே மறைந்து விடுகிறது. நமது முயற்சிகளைக் கைவிட்ட நிலையில் மாற்றம் என்பது தாமாக நிகழ்கிறது.

"நமது அகத்தை அறிவால் ஒருபோதும் வெல்லவே முடியாது."



## ஆசிரியர் பகுதி



K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்,

நமது பகவத் பாதையில் பயணிக்கும் உங்கள் அனைவருக்கும் புத்தாண்டு நல்வாழ்த்துக்களையும் பொங்கல் நல்வாழ்த்துக்களையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

உண்மையில் ஞானத் தெளிவு பெற்ற நிலையில் நமக்கு ஒவ்வொரு நாளும் புதிய நாளே...

நமது வாழ்க்கைப் பயணம் புரிதலுக்குப் பின் ஒவ்வொரு கணத்தையும் புதிய கணமாகவே எதிர் கொள்கிறது. அகத்தில் வேலையில்லை என்று முடித்துக் கொண்ட நிலையில் அங்கே தெரிந்து கொள்வதற்கோ கற்றுக்கொள்வதற்கோ எதுவும் இல்லை. ஆனால் புறத்தில் நாம் தெரிந்து கொள்வதற்கும், கற்றுக்கொள்வதற்கும் ஏராளம் உண்டு. ஒவ்வொரு கணமும் நமக்குக் கற்றுத் தரும் பாடங்கள் ஏராளம். நமது வாழ்க்கை பயணத்தில் நாம் எதிர்கொள்ளும் இன்பத்தைவிட துன்பங்கள் கற்றுத்தரும் பாடங்கள் அதிகம்.

சென்ற டிசம்பர் மாதத்தில் பொழிந்த பலத்த மழையால் சென்னை மற்றும் கடலூர் மாவட்டங்களில் மக்கள் பெரும் அவதிக்குள்ளாகி பல உயிர்ப் பலிகளோடு துன்பத்திலும், துயரத்திலும் ஆழ்ந்தனர். இந்த மழை வெள்ள பாதிப்பால் நாம் கற்றுக்கொண்ட பாடங்கள் என்ன?

மழை வெள்ளத்தால் பாதிப்பு என்று கூறுகிறோம். மழை வெள்ளம் என்பது இயற்கையானது. பாதிப்பு என்பது மனிதனின் பேராசையாலும், அறிவீனத்தாலும் உருவானது.

இந்தத் துயரமான நிகழ்வில் நாம் கற்றுக் கொண்ட பாடம் ''இயற்கை வளத்தை நம் சுயநலத்திற்காக அழித்தால் அது நம்மை நாமே அழித்துக் கொள்வதற்குச் சமம்."

நீர் என்பது உயிர் வாழ்வதற்கான மிக அத்தியாவசியமான ஒன்று.

"நீர் இன்றி அமையாது உலகெனின் யார்யார்க்கும்
வான் இன்றி அமையாது ஒழுக்கு"
-குறள் 20

வள்ளுவர் வான் சிறப்பு என்று மழையின் சிறப்பைக் கூறுவதற்காக ஓர் அதிகாரத்தையே வைத்து நீரின் இன்றியமையாமையை எடுத்துக் கூறுகிறார்.

நீர் இல்லை என்றால் உலகத்தில் உயிர்வாழ முடியாது, மழை இல்லையெனில் ஒழுக்கமும் நிலை பெறாமல் போகும் என்று கூறுகிறார்.

நாம் நீரின் இன்றியமையாமையைப் புரிந்து கொள்ளாமல் எதை எதையோ தேடிக்கொண்டிருக்கிறோம். நீரைச் சேகரிக்க இயற்கையிலேயே அமைந்த ஏரிகளை அழித்து கான்கிரீட் வீடு கட்டி வருகிறோம்.

இயற்கை ஒரு போதும் தவறு செய்வதில்லை. மழை வெள்ளத்தால் பாதிப்பு இல்லை, அதைப் பாதுகாத்து வைக்கும் ஏரிகளை அழித்ததால் பாதிப்பு.

யாரோ சிலரின் பேராசையால் அழிக்கப்பட்ட இயற்கை வளம், எல்லோரையும் பாதிப்பது ஏன்?

சிலரின் பேராசையால் இயற்கை வளம் அழிக்கப்பட்டாலும் அதைப் பலரும் கண்டு கொள்ளாமல் இருந்தது கூடத் தவறுதான். அவர்களின் செயலை வழிமொழிந்தாகவே ஆகிவிட்டது.

தற்போது விஞ்ஞான வளர்ச்சியில் இயற்கையை வென்றதாக மார்தட்டிக் கொள்கிறார்கள்.

இயற்கையை ஒரு போதும் வெல்ல முடியாது. இயற்கை ஒரு போதும் தவறு செய்வதே இல்லை. நாம் செய்யும் தவறுகளுக்குத் தகுந்த கர்ம பலனையே கொடுக்கிறது. அதுவும் நம்மை நாம் செயலில் திருத்திக் கொள்வதற்கான பாடமாகவே அமைகிறது. இயற்கையில் நாமும் ஓர் அங்கம், அதன் ஒரு பகுதியே நாம்.

இயற்கை வளங்களைக் காப்பது நம் கடமை. இயற்கை வளங்களை அழிப்பது என்பது ஒரு மரத்தின் கிளையில் நுனியில் அமர்ந்து கிளையை வெட்டுவதற்குச் சமம்.

இயற்கையை எதிரித்து வாழ்வது சரியான வாழ்வு அல்ல, இயற்கையோடு இணைந்த வாழ்வே முழுமையன வாழ்வாகும்.

நம் மனதின் இயற்கையான இயக்கத் தன்மையை புரிந்து கொண்டதால் விடுதலையை பெற்றோம். நம் பூமியின் இயற்கைத் தன்மையைப் புரிந்து கொண்டால் நம் வாழ்வை வளமாக வாழ்வதோடு எதிர்காலச் சந்ததிகளுக்கு வளமான பூமியை விட்டுச் செல்லலாம்.

**மனதை புரிந்து கொள்வோம்.**
**நல்ல செயல்களை சிறப்பாக செய்வோம்.**



கோடையில் இயற்கைச் சூழல் மிகுந்த

# ஏற்காடு மலைப் பிரதேசத்தில் 4 நாள் சிறப்பு ஞானமுகாம்

வழங்குபவர் : **ஸ்ரீ பகவத் ஐயா** அவர்கள்

இடம் : **House of Peace (Glass House)** அமைதி இல்லம், ஏற்காடு.

நாள் : **12-05-2016** வியாழன் மாலை **3:00** மணி முதல்

**15-05-2016** ஞாயிறு மாலை **3:00** மணி வரை

தலைப்புகள்

1. ஞானப் புரிதல் 2. அகம் - புறம் 3. நான் யார்? 4. நினைவும் சிந்தித்தலும் 5. கர்ம வினை 6. தெளிவில் உறுதி

- இது கோடை காலத்திற்கு ஏற்ற சுற்றுலா தலமாக அமைந்திருப்பதால் குடும்பத்துடன் பங்கு பெறலாம்.
- மேற்குறிப்பிட்ட தலைப்புகளில் ஐயா உரையாற்றுவதோடு அன்பர்களின் எல்லாவிதமான சந்தேகங்களுக்கும் பதில் அளிக்க உள்ளார்.
- ஆண்களுக்கும், பெண்களுக்கும் தங்குவதற்கான தனித்தனி இடவசதி உள்ளது. ஒவ்வொருவருக்கும் தனித்தனி படுக்கை வசதி உள்ளது. தனி அறைகள் 10 மட்டும் உள்ளதால் குடும்பத்துடன் வருபவர்களுக்கு மட்டும் தனி அறை கொடுக்கப்படும்.
- உணவு மற்றும் தங்கும் இடவசதிக்கான செலவு பகிர்வு தலா ஒருவருக்கு ரூ. 3000/- மட்டுமே.
- 90 நபர்கள் மட்டுமே தங்க இடமிருப்பதால் பங்கேற்க விரும்புபவர்கள் விரைவில் முன்பதிவு செய்திட வேண்டுகிறோம்.

முன்பதிவு செய்யும் வழிகள்:

1) **M.O, D.D. (or) Cheque :** வரைவோலை (D.D.) அனுப்புபவர்கள் : **A/c. Sri Bagavath Mission** என்ற பெயரில் சேலத்தில் செல்லத்தக்கதாக அனுப்புமாறு கேட்டுக்கொள்கிறோம்.

2) **Direct payment :** நேரடியாக வங்கியில் செலுத்துபவர்கள் : **Sri Bagavath Mission, HDFC A/c No. : 15907620000075 NEFT IFSC: HDFC 001590** என்ற வங்கிக் கணக்கில் செலுத்தி தெரியப்படுத்தவும்.

3) **Online Payment : Credit Card or Debit Card** மூலம் **www.pravaagam.org** என்ற வெப்சைட்டிலும் முன்பதிவு செய்யலாம்.

**ஸ்ரீ பகவத் மிஷன் 31, இராமலிங்கசாமி தெரு, அம்மாப்பேட்டை, சேலம் - 3. கைப்பேசி : 9994205880, 9789165555.**

## வேண்டுகோள்

ஸ்ரீ பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

நம் அனைவரது கூட்டு முயற்சியால் நமது ஞான இல்லமான "ஸ்ரீ பகவத் பவன்" ஆஸ்ரமத்தின் கட்டிடப் பணி விறுவிறுப்பாக நடைபெற்று வருகிறது.

தற்போது முதல் தளம் கான்கிரீட் (Roof) வேலைகள் அனைத்தும் நிறைவடைந்து கீழ்தளத்திற்கு தேவையான கிரேனைட் மற்றும் டைல்ஸ் மட்டுமே வாங்கப்பட்டுள்ளது. நமது இல்லத்தின் திறப்புவிழாவை 20.01.2016 புதன்கிழமை வைத்துள்ளோம். எனவே அதற்குள் நமது இல்ல கட்டடத்தை நிறைவு செய்வதற்கான நிதி உடனடியாக தேவைபாட்டில் உள்ளது. தற்போது வந்துள்ள நிதி கீழ்தளம் நிறைவு செய்வதற்கு மட்டுமே போதுமானதாக உள்ளது. எனவே கால அவகாசம் மிக குறைவாகவே உள்ளதால் அனைவரும் தாங்களாகவே முன்வந்து தங்களது பங்களிப்பையும் வழங்குமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறோம்.

மேலும் 20.1.2016 அன்று நடைபெறும் நமது இல்லத் திறப்புவிழாவை அனைவரும் குடும்பமாக வந்திருந்து சிறப்பாக நடத்திக் கொடுக்குமாறு அன்புடன் அழைக்கிறோம்.

இதுவரை நன்கொடையாக ரூ.25,000/-மும் அதற்கு மேலும் கொடுத்து தங்களை ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக **(Founders)** இணைத்துக் கொண்டவர்கள்...

## ஆத்மஞானி, தேனிசாமி மற்றும் சுவாமி ஸ்வரூபானந்தா இவர்களோடு...

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
2. திரு. **E.ராமு,** சென்னை.
3. திரு. **சிவகுரு,** கரூர்.
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை.
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை.
8. திரு. **ஜீவமணி,** சேலம்.
9. திரு. **சரவணன்,** சேலம்.
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
11. திரு. **குணாலன்,** கோவை.
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்.
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி**
15. திரு. Eng. **முரளி** சென்னை. குடும்பத்தினர்.
16. திருமதி.**வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன், USA**
23. திரு. **செந்தில்,** தர்மபுரி.
24. திரு. **சரவணன்-முத்துலட்சுமி,** குடும்பத்தினர், சென்னை.
25. திரு. **புலியூர் உடையான்,** சென்னை.
26. திரு. **சரவணன்,** புரசைவாக்கம்.
27. திரு. **சந்திரசேகர்,** வலசரவாக்கம்.
28. திரு. **வெங்கடேஸ்வரராவ்-சிந்தாநிலாதேவி,** பாண்டி.
29. திரு. **மாரிமுத்து,** சென்னை. குடும்பத்தினர்.
30. திரு. **சந்திரசேகர் &** சகோதரர் திரு. **திருமூர்த்தி**
31. திரு. **தேவா ஸ்ரீராம் & தேவாஸ்ரம்** வெள்ளாளப்பட்டி.
32. திரு. **அப்துல் சாகுல் ஹமீது** நாகர்கோயில்
33. திரு. **வேலுசாமி** பெங்களூரு.
34. திரு. **சுரேஷ்குமார்** சேலம்.
35. திருமதி. **S. லட்சுமி லாவண்யா** சேலம்.
36. செல்வி. **S. வைஷ்ணவி** சேலம்.
38. திரு. **முத்துச் செல்வன்** நாகப்பட்டிணம்.
39. திரு. **கார்த்திகேயன்** மற்றும் **குடும்பத்தினர்** சிங்கப்பூர்
40. திரு. **ரவிச்சந்திரன்** பொள்ளாச்சி.
41. திரு. **செந்தில்** (Nigeria) சென்னை.
42. திரு. **ஜெயராமன்** கனடா.
43. திரு. **பாபுலால்** பெங்களூரு.
44. திருமதி. **ஹேமா** அமெரிக்கா.
45. திரு. Dr.**ராஜசேகர்** திருச்சி.
46. திரு. **வேலுமணி** பெருந்துறை.
47. திரு. **உமர் பரூக்** கம்பம், தேனி.
48. திரு. **M.ராஜகோபாலன்** ( கோவை மாருதி பேப்பர் ) பரமத்தி.
49. திரு. **சசிகுமார்** கோவை.
50. திரு. **அன்புசேகர்** நெய்வேலி.
51. திருமதி. **தேவி,** மலேசியா.
52. திரு. **சீத்தல்குமார்,** மயிலாடுதுறை.
53. திரு. **பாலு,** பரமத்திவேலூர்.
54. திரு. **மணிவண்ணன்,** திருச்சி
55. திரு. **ரவிக்குமார்,** நாகப்பட்டணம்
56. திரு. **G. வெங்கடேஷன்,** மதுரை
57. திரு. **சுந்தரராமன்,** மும்பை
58. திரு. **சின்னம்மாள்,** நெல்லை
59. திரு. **கணேஷ்குமார்,** கோயில்பட்டி
60. திரு. **P.சுந்தரராஜன்,** சென்னை
61. திரு. **சிவக்குமார்,** காங்கேயம்
62. திரு. **ஜோசப் ஜெயராஜ்,** ஹைதராபாத்
63. திரு. **பழனியப்பா பிரபு,** கோவை
64. திரு. **மயில்வாகனம்,** மதுரை
65. திரு. **ரகு,** தர்மபுரி
66. திரு. **நாகராஜன்,** தூத்துக்குடி
67. திரு. **பெரியசாமி,** திருச்சி
68. திரு. **ரவி,** ஆந்திரா
69. திரு. **இராதாகிருஷ்ணன்,** சிங்கப்பூர்
70. திரு. **ஹரிகிருஷ்ணன்,** சென்னை
71. திரு. **ஞானசம்பந்தம்,** சென்னை
72. திரு. M.V. **பாலன்,** காரைக்குடி
73. திரு. **சங்கர நாராயணன்,** கும்பகோணம்
74. ஆடிட்டர். திரு.**ஜெயகோபி** & திருமதி. **பிரேமலதா,** சேலம்
75. திரு. **செந்தில்,** டைலர், திண்டுக்கல்
76. திரு. **நவராஜா,** ஜெர்மனி
77. திரு. **Hr. தேவராஜன்,** சேலம்
78. ஜோதிடர். **ஆறுமுகம் தியாகராஜன்,** செகன்ராபாத்
79. திரு. **ரவி,** சென்னை
80. திரு. K.S. **இராமமூர்த்தி** & திருமதி **விஜயகுமாரி,** சென்னை
81. திரு. **வெங்கட்டராமன்,** (டீக்கடை) மறைமலை நகர், சென்னை.
82. திரு. **சிவச்சந்திரன்** & திருமதி. **சாந்தி** குடும்பத்தினர், சென்னை.
83. திரு. **G.பாலசுந்தரம்,** சென்னை
84. திரு. **சுந்தர் விபாகரன்,** சென்னை
85. திரு. **விஜயலிங்கம்,** சென்னை
86. திரு. Dr.**கார்த்திக்,** திருக்கழுக்குன்றம்
87. திரு. **நந்தகுமார்,** T.நகர், சென்னை
88. திரு. **K.R.யுகேஷ்குமார்,** சென்னை
89. திரு. **சரவணன் அங்கப்பன்,** பெங்களூர்
90. திரு. **இராஜசேகர்,** பெங்களூர்
91. திரு. **பாண்டி பரமசிவம்,** சென்னை
92. திரு. **துரைசாமி,** M.O.C சேலம்
93. திரு. A.P. **வேலாயுதம் & சந்திரசாலா** குடும்பத்தினர், சேலம்
94. திரு. **சுதாகர்,** திருச்சி
95. திரு. **சவுந்தரராஜன்,** Sri Ram Chitfunds சென்னை
96. திரு. **ஆனந்தகுமார்,** ஆணைக்கட்டி, கோவை
97. திரு. Eng. **நந்தகுமார்,** சேலம்
98. திரு. **R.அனிஸ்குமார்,** கோவை
99. திரு. **சீனிவாச பிரசாத்,** பேங்களூர்
100. திரு. **கோபி கார்த்திகேயன்,** Advocate, திருவண்ணாமலை.
101. திரு. ஜோதிடர். **இரமேஷ் ராஜகோபால்,** சென்னை.



## ஜென் கதை

# அறிவுத் தடை

அவர் ஒரு புகழ்பெற்ற பேச்சாளர். அவரின் பேச்சை பலரும் பல மணி நேரம் காத்திருந்து கேட்டு செல்வது வழக்கம். ஆன்மீகத்தில் பக்தி கதைகளையும், அனுஷ்டானங்களையும், ஞானிகளின் வாழ்க்கை வரலாறுகளையும் சிறப்பாக எடுத்துக்கூறுவதில் அவருக்கு நிகர் அவரே. அவரது பேச்சு கேட்பவர்கள் அனைவரையும் வசீகரிக்கும் தன்மை கொண்டது. இன்னும் கொஞ்சம் பேச மாட்டாரோ என்று கேட்பவர் மனம் ஏங்கும்படி அமைந்திருக்கும் அவரது பேச்சு.

இவ்வளவு சிறப்புகளைக் கொண்டு இருந்த பேச்சாளர் தன்னளவில் அமைதியும், மனநிறைவும் இன்றித் தவித்தார். அவருக்கு ஏற்படும் கோபம், பயம், கவலை, தீய எண்ணங்கள் போன்றவற்றை எப்படி எதிர்கொள்வது என்பது தெரியாமல் மிகவும் கவலையுடன் இருந்தார். இதை எப்படி வெற்றி கொள்வது என்று தான் படித்த ஞானிகளின் வழிமுறைகளைக் கடைப்பிடித்தார். அனுஷ்டானங்களை முறைப்படி கடைப்பிடித்தார். அனைத்து வழிமுறைகளையும் தொடர்ந்தார். ஆனால் மன அமைதி மட்டும் ஏற்பட்டதாக தெரியவில்லை.

இந்த நிலையில் தன்னுடைய உண்மை நிலையை வெளியில் தெரிவிப்பதற்கு அவர் இவ்வளவு காலம் பேசிய பேச்சுகள் மிகவும் தடையாக இருந்தன. அந்த நிலையில் தான் வாழும் ஞானி ஒருவரின் நூலை யதார்த்தமாகப் படிக்க நேர்ந்தது. அந்த நூலில் அறிவுக்கு எல்லை உண்டு என்றும், மேலும் ஞானமடைவதற்கு அறிவுதான் மிகப்பெரிய தடையாக உள்ளது என்றும் குறிப்பிட்டிருந்தார். இந்த வாக்கியம் பேச்சாளரை மிகவும் தாக்கியது. அவரால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. ஆனாலும் வேறு வழி தெரியாமையால் இரவு முழுவதும் தூக்கமின்றி தவித்தார். அந்த வார்த்தையே திரும்பத் திரும்ப நினைவுக்கு வந்து கொண்டு இருந்தது.

அந்த ஞானியை சந்திப்பது என முடிவு எடுத்தார் பேச்சாளர். ஞானியை அவரது இருப்பிடத்தில் பேச்சாளர் சந்தித்து உரையாடினார். பேச்சாளரிடம் எல்லாவிதமான அலங்காரமும் இருந்தது. ஆனால் ஞானி மிகவும் எளிமையாக எளிதில் அணுகும் முறையில் இருந்தார். இனி அவர்களது உரையாடல்...

"தங்களின் நூலில் ஞானத்திற்கு அறிவுதான் தடை என்று கூறுகிறீர்கள். அதை எந்த மகான் கூறியிருக்கிறார்?" என்றார் பேச்சாளர்.

"மற்ற ஞானிகள் எப்படி கூறி இருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது. எனது தேடுதலின் முடிவில் நான் உணர்ந்த உண்மை இது" என்றார் ஞானி.

ஞானியின் அமைதியான எந்த அலங்காரமும் இல்லாத பேச்சு பேச்சாளர் மனதில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

"அறிவுத்தடை என்று நீங்கள் எதை கூறுகிறார்கள் என்று தெரிந்து கொள்ளலாமா?" என்றார் பேச்சாளர்.

''முடிந்த ஒன்றை மட்டுமே நமது அறிவால் அடையாளம் காண முடியும்" என்கிறார் ஞானி.

பேச்சாளருக்கு விளங்கவில்லை. "இன்னும் கொஞ்சம் விளக்கமாகக் கூற முடியுமா?"

''மனதில் தோன்றி மறைவதை மட்டுமே நமது அறிவால் அறிந்து கொள்ள முடியும். முடிந்த ஒன்றை அறியும் தன்மையில் தான் நமது அறிவு செயல்படுகிறது. வெளிப்பட்ட ஒன்றை மட்டுமே அறிவால் அறிய முடியும். வெளிப்படுவதற்கு எல்லாம் ஆதாரமான ஒன்றை நமது அறிவால் ஒருபோதும் அறிய முடியாது." என்று அமைதியாக கூறினார் ஞானி.

தான் ஒரு அறிவாளி என்று இருந்த எண்ணம் அப்படியே அழிவதை உணர்ந்தார் பேச்சாளர். நாமாக இதுவரை எதையும் உணரவில்லை. நம்மிடம் இருப்பது எல்லாம் வெளி சேகரிப்புதான் என்பது நெத்தியடியாக விளங்கியது.

"நான் இவ்வளவு காலம் கற்ற அறிவு எல்லாம் ஒன்றுமில்லையா?" என்று விரக்தியுடன் கேட்டார் பேச்சாளர்.

"அது மற்ற ஞானிகள் அறிந்த ஒன்றை நீங்கள் சேகரித்து உள்ளீர்கள். அது உங்களுடையது என்று கூற முடியாது. நீங்கள் உணர்ந்தவை மட்டுமே உங்களுக்கு உதவும். நீங்கள் கற்றவைகள் மற்றவர்களுக்கு எடுத்துக் கூற மட்டுமே உதவும்." என்றார் ஞானி.

"அப்படி என்றால் நான் வேறு என்ன தான் செய்வது?" என்றார் பேச்சாளர்.

''என்னுடைய நூல்களில் குறிப்பிட்டுள்ள ஞானத்திற்கு அறிவுதான் தடை என்பதைக்கூட வெறுமனே தெரிந்துகொள்வதால் உங்களுக்கு எந்த மாற்றமும் நிகழப் போவதில்லை. உங்களது அறிவுதான் ஞானத்திற்குத் தடையாக உள்ளது என்பதை நீங்கள் உணர்ந்தால் மட்டுமே **"அறிவுதான் தடை"** என்பதின் பொருள் விளங்கும்." என்றார் ஞானி.

"எப்படி உணர்வது?" என்றார் பேச்சாளர்.

"உங்களுக்கு ஏற்படும் பயம், கோபம், எதிர்மறை எண்ணம் போன்றவற்றை உங்கள் அறிவால் இதுவரை வெற்றி காண முடிந்ததா?" என்றார் ஞானி.

"வெற்றி காண முடியவில்லையே" என்றார் பேச்சாளர்.

''நமது மனம், ஓடிக்கொண்டே இருக்கும் ஆறு, எப்போதும் வீசும் காற்று, சதா இயங்கிக்கொண்டே இருக்கும் பிரபஞ்ச இயக்கம் போன்று இயற்கையானது. அப்படி இயங்கும் மனதில் ஒரு சிறுபகுதியான இயக்கம் மட்டும் தான் நமது அறிவு. அது புறச் செயலுக்கு மட்டுமே உதவக்கூடியது" என்று கூறினார் ஞானி.

பேச்சாளர் பேசுவதற்கு வார்த்தையின்றி ஆசிரியர் முன் இருக்கும் மாணவர் போல் இருந்தார்.

"நீங்கள் எவ்வளவோ சேகரித்துள்ளீர்கள். இந்த உண்மையையும் உணர்ந்து கொண்டால் இன்னும் சிறப்பாக இருப்பீர்கள்." என்றார் ஞானி.

ஞானியை கெட்டியாகப் பற்றிக் கொண்டு "தான் சேகரித்த அறிவு தான் தடை." என்பதை தன்னுள் உணர்ந்து அமைதியானார் பேச்சாளர். அவரின் இதய சிம்மாசனத்தில் முழுவதுமாக ஞானி அமர்ந்திருந்தார்.

**"ஞானத்திற்கு அறிவு தான் தடை"**

நிகழ்ச்சி  நிழல்கள்



திருவண்ணாமலையில்



வெஸ்ட் மாம்பலம் சத்சங்கத்தில்

## ஸ்ரீ பகவத் பவன் கட்டடப் பணி







**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555